ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**16 T I,II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2019**

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

**02. 12. 2019 / 0830 - 1140**

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

| | | |
|---|---|---|
| අමතර කියවීම් කාලය | - | මිනිත්තු 10 යි |
| மேலதிக வாசிப்பு நேரம் | - | 10 நிமிடங்கள் |
| Additional Reading Time | - | 10 minutes |

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## இஸ்லாம் I

**கவனிக்க :**
(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** நபியவர்களுக்கு முதன் முதலாக **வஹி** அருளப்பட்டபோது எத்தனை வசனங்கள் ஓதிக் காண்பிக்கப்பட்டன?
(1) ஒன்று (2) இரண்டு (3) நான்கு (4) ஐந்து

**2.** ஒரு முஸ்லிம் மூன்று பணிகளை நிறைவேற்ற வேண்டியவனாக உள்ளான். அவற்றுள் ஒன்று **இமாரத்** ஆகும். மற்றைய இரண்டும் யாவை?
(1) ரிஸாலத், மஆத் (2) மஆத், கிலாபத்
(3) இபாதத், கிலாபத் (4) கிலாபத், தௌஹீத்

**3.** அறபுத் தீபகற்பத்தின் மேற்கு எல்லை யாது?
(1) சிரியா பாலைநிலம் (2) செங்கடல்
(3) அறபுக் கடல் (4) பாரசீகக் குடா

**4.** பஜ்ரான தொழுகையைத் தொடர்ந்து பின்வருவனவற்றுள் எதனை ஓதினால் அவர் அடுத்த தொழுகை வரை அல்லாஹ்வின் பாதுகாப்பில் இருப்பார் என்று நபியவர்கள் குறிப்பிட்டார்கள்?
(1) குல் சூராக்களை ஓதுதல் (2) சூரதுல் முஅவ்விததைனை ஓதுதல்
(3) ஆயதுல் குர்ஸியை ஓதுதல் (4) சூரா யாசீனை ஓதுதல்

**5.** பின்வருவனவற்றுள் வுழு செய்வதற்கு ஆகுமாக்கப்பட்ட நீர் எது?
(1) மழை, பனி, ஆலங்கட்டி நீர்
(2) பன்னீர் போன்ற கரைசல்களைக் கொண்ட நீர்
(3) இளநீர் போன்ற இயற்கையான நீர்
(4) சுத்தமான ஆனால் ஏற்கனவே வுழு செய்வதற்குப் பயன்படுத்தப்பட்ட நீர்

**6.** இஸ்லாம் மார்க்கத்தை விட்டும் வெளியேறுதல் ரித்தத் எனப்படுவது போல **இறைவன் இல்லை** எனக் கூறுவது
(1) நிபாக் எனப்படும் (2) பஸாத் எனப்படும் (3) இல்ஹாத் எனப்படும் (4) குப்ர் எனப்படும்

[பக். 2 ஐப் பார்க்க

**7.** ஒரு பொருளை விற்பனை செய்யும்போது, அதன் கொள்விலை, இலாபம் என்பவற்றை அப்பொருளை வாங்குபவர் தெரிந்துகொண்டிருக்கும் நிலையில் நடைபெறும் வியாபார முறை எது?
(1) முஷாரகா (2) முழாரபா (3) முதாரஆ (4) முறாபஹா

**8.** ஒருவரிடம் 110 ஆடுகள் காணப்பட்டால் அவர் கொடுக்க வேண்டிய ஸக்காத்தின் அளவு யாது?
(1) ஒரு ஆண் ஆடு (2) ஒரு பெண் ஆடு
(3) இரு பெண் ஆடுகள் (4) இரு ஆண் ஆடுகள்

**9.** பின்வருவனவற்றுள் **வஹி கைறு மத்லுவ்வு** என்பதற்கான உதாரணம் எது?
(1) ஸஹாபாக்களின் கருத்துக்கள் (2) நபியவர்களின் ஹதீஸ்கள்
(3) ஸஹாபாக்களின் இஜ்மாக்கள் (4) குர்ஆன், ஹதீஸுக்கு முரண்படாத விடயங்கள்

**10.** இத்ரீஸ் (அலை), இப்றாஹீம் (அலை) ஆகியோருக்கு அருளப்பட்ட **ஸுஹுபு**களின் எண்ணிக்கை முறையே எத்தனை?
(1) 10, 10 (2) 10, 50 (3) 30, 10 (4) 50, 50

**11.** பின்வரும் அறுபுச் சொற்றொடர்களுள் இஸ்லாமிய திருமணத்தோடு தொடர்புடைய சொற்களைக் கொண்ட தொகுதியைத் தெரிவுசெய்க.
A - மஹ்ர் B - ரிழா C - வலி D - மஹ்ரமி
E - தக்ரீர் F - அஸ்ஸுலூக் G - தவக்குல் H - வலீமா
(1) A B C D (2) A C D H (3) B D G H (4) C E F H

**12.** அல்லாஹ்வின் **அல்முஃனீ** என்ற பெயர் அவனின் எந்தப் பண்பினைக் குறித்துக் காட்டுகின்றது?
(1) செல்வந்தன் (2) செல்வந்தனாக ஆக்குபவன்
(3) தாராளமாகக் கொடுப்பவன் (4) அதிகளவு உதவி செய்பவன்

**13.** பின்வருவனவற்றுள் நேர் - எதிர்க் கருத்துக்களைக் காட்டும் சொற்றொகுதி யாது?
(1) யவ்முல் கியாமா - யவ்முல் ஆகிறா
(2) கல்புன் ஸலீம் - கல்புல் முத்மஇன்னா
(3) ஈமான் - குப்ர்
(4) அக்லாக் ஹஸனா - மகாரிமுல் அக்லாக்

**14.** பிறசமயத்தோரை மதித்து நடத்தல், நடுநிலை பேணல் போன்றன இஸ்லாத்தின் போதனைகளாகும். இவை,
(1) வஸதிய்யா சார்ந்தவையாகும். (2) அவ்லவிய்யாத் சார்ந்தவையாகும்.
(3) தஸ்கியா சார்ந்தவையாகும். (4) இலாஹிய்யாத் சார்ந்தவையாகும்.

**15.** பின்வரும் அட்டவணையில் 'அ' நிரலில் குர்ஆன் குறிப்பிடும் சிலரின் செயற்பாடுகளும் 'ஆ' நிரலில் அந்த செயற்பாடுகளைக் குறித்துக் காட்டும் அல் - குர்ஆன் ஸூராக்களின் பெயர்களும் தரப்பட்டுள்ளன.

| | அ | ஆ |
|---|---|---|
| 1. | வாலிப வயதில் கற்பொழுக்கம் பேணிய நபி பற்றிய வரலாறு | A - ஸூரா **கஹ்ப்** |
| 2. | சமூகத்தை அடிமைத்தளையிலிருந்து விடுவித்த மூஸா நபியின் வரலாறு | B - ஸூரா **பகரா** |
| 3. | ஷிர்க்கில் ஈடுபட்ட சமூகத்தாரைப் பாதுகாக்க முனைந்த நபி இப்ராஹிம் வரலாறு | C - ஸூரா **அஃராப்** |
| 4. | அரச அத்துமீறலிலிருந்து ஈமானைப் பாதுகாத்துக் கொண்ட வாலிபர்கள் பற்றிய வரலாறு | D - ஸூரா **யூஸுப்** |

மேலே 'அ' நிரலுக்குப் பொருத்தமான விதத்தில் 'ஆ' நிரலை ஒழுங்குபடுத்தும்போது சரியாக அமையும் தெரிவு யாது?
(1) A C B D (2) B C A D (3) D C A B (4) D C B A

[பக். 3 ஐப் பார்க்க

16. உமர் (ரிழி) அவர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் இடையே இடம்பெற்ற 'உமர் சாசனம்' எங்கே கைச்சாத்திடப்பட்டது?
(1) மதீனா (2) குத்ஸ்
(3) கூபா (4) கைரவான்

17. **தர்பிய்யா** என்பதன் பொருள் யாது?
(1) உடற்பயிற்சி (2) இறையச்சம்
(3) ஆன்மீக மற்றும் பண்பாட்டுப் பயிற்சி (4) பாவமீட்சி

18. இலங்கையின் 'ஸேர் செய்யத் அஹ்மத் கான்' எனப் புகழ்ந்துரைக்கப்பட்டவர் யார்?
(1) அறிஞர் எம்.ஸீ. சித்திலெப்பை (2) கலாநிதி பதியுத்தீன் மஹ்மூத்
(3) அறிஞர் ஏ.எம்.ஏ அஸீஸ் (4) கலாநிதி டீ. பீ ஜாயா

19. "அல்லாஹ்வின் கட்டளைகளைக் கொண்டு உனது ஆசைகளைவிட்டும் வெறுமையாகி நில், அறிவைச் சுமக்கும் பாத்திரமாக நீர் மாறுவதற்குத் தகுதி பெறுவாய்" எனும் மெய்ஞ்ஞானக் கருத்தைக் குறிப்பிட்டவர்
(1) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) ஆவார்.
(2) இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) ஆவார்.
(3) புழைல் இப்னு இயாழ் (ரஹ்) ஆவார்.
(4) முஹியுத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) ஆவார்.

20. மகனின் மனைவி **மஹ்ரமியாகக்** கணிக்கப்படுவதற்குக் காரணமாக அமைவது யாது?
(1) குடும்ப உறவாகும். (2) திருமண உறவாகும்.
(3) இரத்த உறவாகும். (4) சம்பிரதாய உறவாகும்.

21. இஸ்லாமிய அகீதாவில் புலன்களுக்கு அப்பாற்பட்ட ஜின்கள், மலக்குகள், ரூஹ் போன்றன பற்றிக் குறிப்பிடும் பகுதி
(1) அர் - ரூஹானிய்யாத் ஆகும். (2) அன் - நுபுவ்வாத்ஆகும்.
(3) அஸ் - ஸம்இய்யாத் ஆகும். (4) அல் - இலாஹிய்யாத் ஆகும்.

22. பின்வருவனவற்றுள் கலீபா உமர் (ரழி) அவர்கள் நிறைவேற்றிய பணி
(1) ஹிஜ்ரி ஆண்டை அறிமுகப்படுத்தியமை ஆகும்.
(2) அல்-குர்ஆனை நூலுருப்படுத்தியமை ஆகும்.
(3) கடற்படையை நிறுவியமை ஆகும்.
(4) கொன்ஸ்தாந்திநோபிளை வெற்றிகொண்டமை ஆகும்.

23. **தர்தீபுத்திலாவத்** என்பதன் மூலம் கருதப்படுவது யாது?
(1) அல்-குர்ஆன் தொகுக்கப்பட்டுள்ள ஒழுங்கு
(2) அல்-குர்ஆன் அருளப்பட்ட ஒழுங்கு
(3) அல்-குர்ஆன் ஓதப்படுகின்ற ஒழுங்கு
(4) அல்-குர்ஆன் வசனங்கள் அருளப்பட்டமைக்கான காரணங்கள்

24. **தவக்குல்** என்பதன் மூலம் கருதப்படுவது,
(1) பேணுதலாக நடத்தலாகும்.
(2) அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தலாகும்.
(3) முயற்சியின் பின் அல்லாஹ்விடம் பொறுப்புச் சாட்டலாகும்.
(4) அல்லாஹ்வின் திருப்தியை எதிர்பார்த்திருத்தலாகும்.

**25.** ஹசீனா, இளம் வயதிலே தந்தையை இழந்து தாயின் அரவணைப்பில் வாழ்ந்தவள். அவள் மணப் பெண்ணானபோது, அவளுக்கு **வலி** ஆக இருக்க மிகப் பொருத்தமானவர் பின்வருவோருள் எவர்?
(1) ஹசீனாவின் தாயின் சகோதரியின் கணவர் (2) ஹசீனாவின் தந்தையின் சகோதரர்
(3) ஹசீனாவின் தாயின் சகோதரர் (4) ஹசீனாவின் சகோதரியின் கணவர்

**26.** பின்வரும் அட்டவணையில் **'அ'** நிரலுக்கேற்ப **'ஆ'** நிரலை சரியான ஒழுங்குபடுத்தும்போது பொருத்தமாக அமையும் விடையினைத் தெரிவுசெய்க.

| | அ | | ஆ |
|---|---|---|---|
| 1. | ஹுதைபிய்யா | A | ஸஹாபாக்கள் |
| 2. | அகபா | B | யூதர்கள் |
| 3. | மதீனா சாசனம் | C | குறைஷிகள் |
| 4. | பைஅதுர் ரிழ்வான் | D | அவ்ஸ் - ஹஸ்றஜ் |

(1) B A C D (2) C D A C (3) C D B A (4) D C B A

**27.** ஜமாஅத் தொழுகைக்காகப் பள்ளிவாசலை நோக்கி மோட்டார் சைக்கிளில் சென்றுகொண்டிருந்த சமீம், பாதையில் கண்ட தனது நண்பனைத் தலைக்கவசம் இன்றி சைக்கிளில் ஏற்றிச் சென்றான். இச்செயலை எவ்வாறு கருத முடியும்?
(1) சகோதரத்துவத்தை வளர்க்கத் துணையாதல்
(2) நன்மைகள் அதிகரிக்கக் காரணமாதல்
(3) உதவி செய்யும் மனப்பாங்கை வளர்த்தல்
(4) சட்டத்தை மீறும் செயலாதல்

**28.** **அல் - ஹதீஸ்** இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரங்களுள் ஒன்றாக அமைவதற்கான பிரதான காரணி பின்வருவனவற்றுள் எது?
(1) நபியவர்களைப் பின்பற்றுமாறு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளமை
(2) ஸஹாபாக்கள், நபிகளாரைப் பின்பற்றி தமது வாழ்வை அமைத்துக் கொண்டமை
(3) அல்-குர்ஆனைப் போலவே அல்-ஹதீஸும் பாதுகாக்கப்பட்டு வருகின்றமை
(4) ஹதீஸ் இஸ்லாத்தின் சட்ட மூலாதாரம் என்ற கருத்தில் முஸ்லிம் உம்மத் ஒன்றுபட்டுள்ளமை

**29.** **குல்உ** பற்றிப் பின்வரும் கூற்றுகளுள் சரியானதைத் தெரிவுசெய்க.
(1) கணவன், மனைவியைத் தலாக் செய்வதாகும்.
(2) கணவன், மனைவியைத் தாய்க்கு ஒப்பிடுவதாகும்.
(3) மனைவி தன் கணவனைத் தலாக் செய்வதாகும்.
(4) திருமணத்தை இரத்துச் செய்வதாகும்.

**30.** பின்வரும் கூற்றுகள் சம்பந்தமாக சரியான விடையினைத் தெரிவுசெய்க.
A - **தக்பீர் தஹ்ரீமா, துஆஉல் இப்திதாஹ்** இரண்டும் வேறுபட்ட விடயங்களாகும்.
B - குர்ஆன் குறிப்பிடும் **ஹிக்மா** என்ற பதம் ஞானத்தைக் குறிக்கின்றது என இமாம் மாலிக் (றஹ்) குறிப்பிட்டுள்ளார்கள்.
C - ஸக்காத் விதியாவதற்கான நிபந்தனைகளுள் நிஸாபை அடைந்திருத்தல், வருடம் பூர்த்தியாயிருத்தல் என்பனவும் உள்ளடங்கும்.
D - ஹஜ்ஜின்போது ஆண்கள் தலையை மறைப்பதும் பெண்கள் முகத்தை மூடுவதும் தவறாகமாட்டாது.
(1) A, B மாத்திரம் சரியானவை (2) A, C மாத்திரம் சரியானவை
(3) A, B, C மாத்திரம் சரியானவை (4) A, C, D மாத்திரம் சரியானவை

**31.** **ஹனீப்கள்** எனப்படுவோர் யாவர்?
(1) ஜாஹிலிய்யாக் காலத்தில் ஷிர்க் இல் ஈடுபடாதவர்கள்
(2) நபியவர்களைத் துன்புறுத்தியவர்கள்
(3) நெருப்பு வணக்கத்தில் ஈடுபட்டவர்கள்
(4) அபீஸீனியா ஹிஜ்ரத்தில் கலந்துகொண்டவர்கள்

[பக். 5 ஐப் பார்க்க

**32.** "நீ அல்லாஹ்வின் எதிரி என்பதால் உன்னை யுத்தக் களத்தில் கொல்லத் துணிந்தேன், நீ என்னைக் காறி உமிழ்ந்தபோது எனது எதிரியாக மாறிவிட்டதால் உன்னைக் கொலை செய்தால் அல்லாஹ்விடம் கூலி இல்லாமல் போய்விடும்" எனக் கூறி எதிரியை விட்டுவைத்தவர்.
(1) காலித் இப்னு வலீத் (ரழி) ஆவார்.
(2) முஆவியா (ரழி) ஆவார்.
(3) உமர் (ரழி) ஆவார்.
(4) அலி (ரழி) ஆவார்.

**33.** தூய அகீதாவைப் பாதுகாப்பதில், இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் எப்பிரிவினரது சிந்தனைக்கு எதிராக விஷேடமாக குரல் எழுப்பினார்கள்?
(1) ஷீஆ
(2) மு.'.தஸிலா
(3) அஷ்அரிய்யா
(4) கவாரிஜ்

**34.** **ஈஜாப், கபூல்** என்ற சொற்பிரயோகங்கள் பயன்படுத்தப்படுகின்ற இரண்டு செயற்பாடுகளும் யாவை?
(1) திருமணம், விவாகரத்து
(2) உடன்படிக்கைகள், சாட்சியம்
(3) கொடுக்கல் வாங்கல், திருமணம்
(4) தண்டனைகள், விடுதலை

**35.** **தயம்முமின்** உறுப்புக்கள் யாவை?
(1) முகமும் இரண்டு கால்களும்
(2) முகமும் இரண்டு கைகளும்
(3) முகமும் தலையும்
(4) இரண்டு கால்களும் இரண்டு கைகளும்

**36.** ஹுதைபதுல் யமானி (ரழி) என்ற நபித் தோழரை எவ்வாறு அறிமுகப்படுத்துவீர்?
(1) கலீபா உமர் (ரழி) அவர்களின் பின், அல் - குர்ஆனைத் தனது பாதுகாப்பில் வைத்திருந்தவர்.
(2) அல்-குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் காதிபுல் வஹியாக இருந்தவர்.
(3) அல்-குர்ஆன் தொகுப்பின் மூன்று கட்டங்களிலும் சம்பந்தப்பட்டவர்.
(4) கலீபா உஸ்மான் (ரழி) காலத்தில் அல் - குர்ஆன் தொகுக்கப்படக் காரணமாக இருந்தவர்.

**37.** **ரப்புல் ஆலமீன்** என்பதன் கருத்து யாது?
(1) அகிலங்களின் இரட்சகன்
(2) புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே
(3) அல்லாஹ் ஒருவன்
(4) அகிலத்தின் அருட்கொடை

**38.** **அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக இல்மன் நாபிஆ வரிஸ்கன் தய்யிபா வஅமலன் முதகப்பலா** என்ற துஆவை எந்தத் தொழுகையின் அல்லது தொழுகைகளின் பின்னர் ஓதுவது ஸுன்னத்தாகும்?
(1) ஐங்காலத் தொழுகைகள்
(2) ம.'.ரிப்
(3) ஸுப்ஹ், ம.'.ரிப்
(4) ஸுப்ஹ்

**39.** மூவரது கண்கள் நரகைக் காணமாட்டாது; அவற்றுள் ஒன்று அல்லாஹ் தடை செய்தவற்றைப் பார்க்காது தவிர்த்துக் கொண்ட கண், ஏனைய இரண்டுள் ஒன்று
(1) அல்லாஹ்வை மறுமையில் தன் கண்களால் காணவேண்டும் என ஆசைப்பட்ட கண்
(2) நபி (ஸல்) அவர்களைக் காணவேண்டும் என ஆசைப்பட்ட கண்
(3) சுவனத்தைக் காணவேண்டும் என ஆசைப்பட்ட கண்
(4) அல்லாஹ்வின் அச்சத்தால் அழுத கண்

**40.** கலீபா உஸ்மான் (ரழி) காலத்தில், இஸ்லாமிய சாம்ராஜ்யம் விரிவுபடுத்தப்பட்ட நாடுகள் யாவை?
(1) அலெக்ஸான்டிரியா, மொரோக்கோ, டியுனிசியா
(2) ஆஜன்டீனா, ஸ்பானியா, பிரித்தானியா
(3) செனகல், மடகஸ்கார், இந்தியா
(4) இந்தியா, பாகிஸ்தான், நேபாளம்

* *

[பக். 6 ஐப் பார்க்க

**16 | T | I,II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

✻ முதலாம் வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, மொத்தமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

✻ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை எழுதுக.

(i) **பர்ளு கிபாயா** என அடையாளப்படுத்தப்படும் செயற்பாடுகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) **ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா** என்று **இ'திதாலுக்கு** வந்ததும் அங்கு ஓதவேண்டிய துஆவை உமது மொழியில் எழுதுக.

(iii) **ஸுஜூதின்**போது நிலத்திற்படவேண்டிய நெற்றி மற்றும் இரு உள்ளங்கைகள் தவிர்ந்த ஏனைய நான்கு உறுப்புக்களையும் **இவ்விரண்டாகக்** குறிப்பிடுக.

(iv) ஸக்காத் பெறுவோரில் **பீஸபீலில்லாஹ், இப்னு ஸபீல்** என்போரை வேறுபடுத்திக் காட்டுக.

(v) ஹஜ்ஜுக்கு நிய்யத்து வைக்கும் முறைகளுள் **அல் - இப்ராத்** என்பதன் விளக்கம் யாது?

(vi) முறையான **தலாக்குக்**குரிய நிபந்தனைகளுள் **இரண்டை** முன்வைக்குக.

(vii) **இஜாரா, ஸலம்** எனும் வர்த்தக முறைகளுக்கு இடையிலான வேறுபாட்டைக் கூறுக.

(viii) கலீபா அலி (ரழி) அவர்களால் மேற்கொள்ளப்பட்ட பணிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ix) அறபு வரலாற்றாசிரியர் **இப்னு ஷஹ்ரயார்** தனது **அஜாஇபுல் ஹிந்து** எனும் நூலில் இலங்கையைப் பற்றிக் குறிப்பிடும் தகவலைச் சுருக்கமாகக் குறிப்பிடுக.

(x) இஸ்லாமிய வரலாற்றில் நெறிபிறழ்ந்த சிந்தனைப் பிரிவினர்கள் தோற்றம் பெற ஏதுவாய் அமைந்த காரணிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**2.** (i) இஸ்லாம் தடைசெய்துள்ள வர்த்தக முறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) **முஷாரகா** வர்த்தகமுறை பற்றிச் சுருக்கமாக விவரிக்குக.

(iii) பொருளீட்டலின்போது கடைப்பிடிக்க வேண்டிய **ஷரீஅத்** வரையறைகள் **ஐந்தை** விளக்குக.

**3.** (i) **தாருல் பனா** என்றால் என்ன?

(ii) கத்முன் நுபுவ்வத் என்றால் என்ன? அது தொடர்பான **அல்-குர்ஆன், அல்-ஹதீஸ்** ஆதாரங்கள் **ஒவ்வொன்றை** முன்வைக்குக.

(iii) **சூரா புர்கானில்** குறிப்பிடப்பட்டுள்ள **ஐந்து** நற்பண்புகளைப் பட்டியலிட்டு விளக்குக.

**4.** (i) ஸக்காத்தின் சமூகப் பயன்பாடுகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) நோன்பினால் கிடைக்கப்பெறும் பயன்பாடுகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(iii) தொழுகையின் முக்கியத்துவம் பற்றிக் குறிப்பிட்டு, அதன் மூலம் கிடைக்கப்பெறும் **மூன்று** சமூகப் பயன்களைத் தெளிவுபடுத்துக.

[பக். 7 ஐப் பார்க்க

**5.** (i) **இஜ்திஹாத்** என்றால் என்ன?

(ii) **இஜ்மாவின்** வகைகள் **இரண்டைக்** குறிப்பிட்டு அவற்றுள் **ஒன்றை** விவரிக்குக.

(iii) **பிக்ஹு** என்றால் என்ன எனக் குறிப்பிட்டு, மத்ஹபுகளுடைய இமாம்கள் **நால்வரையும்** சுருக்கமாக அறிமுகம் செய்க.

**6.** (i) குறைஷியர் நபியவர்களின் **த.்.வாவை** எதிர்த்தமைக்கான **இரண்டு** காரணிகளை முன்வைக்குக.

(ii) **ஸீறாவைக்** கற்க வேண்டும் என்பதற்கான காரணிகளை முன்வைக்குக.

(iii) **ஸுன்னாவின்** முக்கியத்துவம் பற்றி அல்-குர்ஆன், அல் - ஹதீஸ் ஆதாரங்களுடன் விளக்குக.

**7.** பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(i) அறிஞர் எம். ஸீ. சித்திலெப்பை

(ii) இலங்கையின் பிரஜை என்ற வகையில் ஒரு முஸ்லிம் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகள்

(iii) **அஜ்னபிகளுடன்** வரையறை பேணல்

(iv) வாழ்வு ஒரு வணக்கம்

* * *